# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத – கார்த்திகை – 2015 – நவம்பர்

ANo: 41

நமது கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி
மற்றும் முத்துராமலிங்க ஆண்டவர் பள்ளியில்
வைக்கப்பெற்ற நவராத்திரி கொலு

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - கார்த்திகை - 2015 - நவம்பர் இதழ் - 41

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்".
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்

1. ஆசியுரை 2
2. சுபாநுவத் திருவாக்கு 4
3. சித்த ஞானம் 9
4. கண்ணப்ப நாயனார் 15
5. இறை வணக்கமா ? இறைவி வணக்கமா ? 22
6. மாணிக்கவாசகரின் பக்தி வலை 27
7. கோயிலூர்ப் புராணம் 33

தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

பரிபுரம் ஒலிதரு பாத தாமரை
பவளநற் செவ்வாய்ப் பங்கயச் செல்வி
பக்குவ முனிவர் பணிந்தெழு பாவை
பக்தரைக் காக்கும் பனிமலை வல்லி




நரிபரி ஆக்கிய நாயகன் துணைவி
நற்றமிழ்ச் சங்கப் பொற்புறு கூடல
நாடாள் கின்ற பீடுடை அரசி
நந்தமிழ்ப் பொதியைச் செந்தமிழ் முனிவன்

வரிவரி யாக வண்டமிழ் பாட
வாக்கினை அருளிய வண்ணத் தேவைத்
வன்னிகள் நிறைந்த வனத்தமர் ஞான
வனிதையை ஞான வாணியை வேழக்

கரிமுகன் ஈன்ற கன்னியை நம்மைக்
காத்தாள் நெல்லை நாயகி காலைக்
கதியெனப் பிடிப்பார் கயிலையைப் பிடிப்பார்
காப்பதற் குரிய காவலும் அவளே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

***சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்***

இந்தப் பருவம் விழாக்களின் பருவம். விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, தீபாவளி, கந்தசஷ்டி, திருக்கார்த்திகை, மார்கழி தரிசனம் எனத் தொடர்ந்து திருவிழாக்கள்; தமிழகத்தில் கொண்டாட்டங்கள் நடைபெறுகின்றன. இப்படி ஒவ்வொரு திருவிழாவிலும் மக்கள் கூட்டம் உற்சாகமாகக் கலந்து கொண்டு, பக்தி சிரத்தையுடன் ஈடுபடுகிறார்கள். இந்தப் பழக்கத்தினாலே அவர்களுடைய துயரங்கள், சிரமங்கள் குறைந்து உற்சாகம் ஏற்படுகிறது. அது, தொடர்ந்து உழைக்கவும், பாடுபடவும் வேண்டிய ஆற்றலைத் தருகிறது. இதற்குத்தான் நம்முடைய முன்னோர்கள் திருவிழாக்களை அடிக்கடி ஏற்படுத்தி உள்ளார்கள். அதிலே பொருட்செலவு ஆனாலும், கிடைக்கின்ற மகிழ்ச்சியும், அருளும் நம் மனதைச் சாந்தப்படுத்தவும், பக்குவப்படுத்தவும் உதவுகின்ற கருவியாக உள்ளது.



அண்மையில் நம்முடைய திருக்களர் மடத்திலே பாரிஜாதவனேஸ்வரர் திருக்கோவில் சார்பாக, திருக்களர் கிராம மக்களின் கொடையாக, சூரசம்ஹார நிகழ்ச்சி நடத்தப்பெற்றது. அந்தச் சிறிய கிராமத்திலே ஆடவர், பெண்டிர், சிறுவர்கள் என ஐநூறுக்கும் மேலானவர்கள் கண்டு களித்தார்கள். அதிலும் செந்தில் ஆண்டவர் சூரனைத் துரத்தி வருவதும், சூரன் பின்பு செந்தில் ஆண்டவரை எதிர்த்து முன்னேறுவதுமாக இரண்டு வாகனங்களையும் முன்னும் பின்னுமாகவும், வலமாகவும் தூக்கிக் கொண்டு சீர்பாதம் தாங்கிகள் விரைந்து செல்கின்ற காலத்திலே சிறுவர், சிறுமியரும் உற்சாகமாக ஆரவாரத்தோடு அவர்களோடு ஓடியது, மன மகிழ்வைத் தருகின்ற காட்சியாக இருந்தது. எனவே, கிராமத்தில் கோவில் சார்பாக உள்ள அனைத்துத் திருவிழாக்களையும் முறையாக, செம்மையாகக் கொண்டாடினால் கிராம மக்களிடையே மகிழ்வும் ஒற்றுமையும், உழைக்கின்ற ஆர்வமும் தம்முடைய கிராமத்தை முன்னேறச் செய்ய வேண்டுமென்ற ஆசையும் நிச்சயமாக வளரும்.

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக நடத்தப்படாமல் இருந்த சித்திரைத் திருவிழாவை 2014ல் மீண்டும் தொடங்கி நடத்துவதிலிருந்து நாம் கண்கூடாகக் காண்கிறோம். 15 ஆண்டுகளுக்கும் மேலாக நடத்தப்படாமல் இருந்த சூரசம்ஹார நிகழ்ச்சி நடத்தி மக்கள் மகிழ்வுற்றதைக் கண்ணாரக் கண்டு நாமும் மகிழ்ந்தோம். இந்த நிகழ்ச்சிகளிலே குழந்தைகள் கலந்து கொண்டு மிகுந்த உற்சாகத்துடன் பங்கேற்றது கவனிக்கத்தக்கது. நம்முடைய குழந்தைகளைக் கிராமத் திருவிழாக்களில் கண்டிப்பாகக் கலந்து கொள்ளச் செய்ய வேண்டும். அதன் மூலமாக அவர்களுக்குள்ளே நட்பும், உறவும், ஒற்றுமையும் நல்ல முறையிலே வளரக்கூடும். முக்கியமாக, கிராமத்தினுடைய தன்மை மாறாமல், கிராமத்தைக் கல்வி, தொழில், வணிகம் ஆகியவற்றைப் பெருக்கி வளர்க்க முயல வேண்டும். கிராமத்தினுடைய ஆன்மாவை அழித்து விடக்கூடாது. எளிமை, உழைப்பு, ஒற்றுமை, ஒருவருக்கொருவர் உதவும் பண்பு இத்தகைய கிராமியப் பண்புகளை அழியவிடாமல் நாம் பாதுகாக்க வேண்டும். நகரங்களைப் பெரிதாக்கி, கிராம மக்கள் இடம் பெயர்ந்து கொஞ்சம் கொஞ்சமாகக் கிராமங்கள் அழிகின்ற காட்சி மனதிற்கு மிகுந்த வருத்தததை அளிக்கின்றது. அந்த அழிவிலிருந்து கிராமத்தைக் காக்கக் கூடியவை கிராமியத் திருவிழாக்களே. அதனைத் தொடர்ந்து நடத்துவோமாக !

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

# கோவிலூர் ஆண்டவர் அருளிய
# சுபாநுவத் திருவாக்கு (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

**வைராக்யம் I :**

(முற்குறிப்பு : பல வகைப்பட்ட உலகியல் அனுபவங்கள் உள்ளன. இம்மை மட்டுமின்றி, மறுமையிலும் கூட அனுபவங்கள் கிட்டலாம். ஆனால், அனுபவங்கள் எதுவும் நிரந்தரமல்ல, இவை துன்பத்தில் முடிபவை எனவும் தெரிகிறது. நிரந்தரமான இன்பம் எனும் ஆனந்தம் பெற வேண்டுபவர், தேவையற்ற சில அனுபவங்களினின்றும் ஒதுங்க வேண்டும். விடுதல் நிலையான இதுவே 'வைராக்யம்' எனப்டுவதாகும். இதனை, 'இக பர முத்திரார்த்த பல போக விராகம்' எனச் சொல்கிறார்கள். இது ஒரு செய்முறை (சாதனை) யாகக் கருதப்படுகிறது.

வைராக்யம் பற்றிய ஆண்டவரது பாக்கள், இரு பகுதிகளாக்கப்பட்டு, இந்த இதழிலும், அடுத்த இதழிலும் தொடரும்.)

**I புலனடக்கம் மற்றும் செயலடக்கம் : திருவாக்கு :**

1. "சரும ஆதி ஆறோடும் சந்தம் நாறு ஆகம்
அருமை என எண்ணி அலைவேனோ..." (26/ 42)
(ஆதி - தொடங்கிய, சந்ததம் - எப்போதுமே, ஆகம் - உடல்)

2. "உன்னைக் கதி என்று அடையாமல்
ஓகோ உலக வாஞ்சையினால்
என்னே, இற்றை நாள்வரைக்கும்
இழிவாம் தொழிற்கே இழுத்தல் கண்டாய் ..." (36/66)

3. "செய்ததுவே செய்யத் தினம் துணிந்து செல்வதுவே
உய்யும் வழி என்று ஒருப்பட்டாய் நெஞ்சகமே. (121/49)

4. "தூங்காது தூங்குவது தூயோர் தமக்கு உளது
சொல்கின்ற காமனுடனே"
தூங்கப், பிறர் செல்வம் வாங்கக் கொடிகட்டிச்
சுற்றிச் சுழன்ற என்னை...." (42/71)

5. "அச்சம் தவிர்ந்த நிலை யாம் அதனைச் சேராமல்
துச்சவினை புரியத் துணிந்தனையே நெஞ்சகமே." (110/5)

6. "நாடிப் பொறிகள் ஐந்தில் நாள்தோறும் நாணாமல்
ஓடி எடுத்தபலன் ஒன்று ஒன்றோ ...." (31/55)

7. "ஆமை உறுப்பை அடக்குதல் போல் காண்பலவையாம்
தீமைதனில் புலனைச் சேர்க்காதே நெஞ்சகமே." (117/31)

8. "இன்னல் உறும் உடல் இருக்க எண்ணும் எணம் போதும்
இரு நான்கு சித்திகளில் இச்சைவைத்தல் போதும்
நன்னயமாம் சோதிடத்தில் நாட்டம் இனிப்போதும்
நல் இரும்பு பொன்னாக்கும் நசையதுவும் போதும்
பின்னம் உறும் வைத்தியத்தைப் பெறும் ஆசைபோதும்
பேதம் உறும் இவை முதலாம் பிராந்தியினை விட்டு.."
(20/27)

உபதேசத் திருவாக்கியங்கள் :

1. "பிரபஞ்சத்தில் பஞ்ச விடய சுகத்தில் பொருந்தும் போது பிரியமாய் இருக்கும். பிற்பாடு, தனக்குத்தானே வெறுப்புக்காணும்....." (148/36)

2. "அக்னியில் எவ்வளவு பொறிகிளம்பினாலும், அக்கினிக்கு லாபம் இல்லாதது போல ..... தேகாதிமுதலாய் வாழ்ந்ததாயும் தாழ்ந்ததாயும் உள்ள என்ன நினைவு வந்தாலும் கற்பிதமே...." (154/59)

3. "தேகோக புத்தியினாலே அருந்தல் ; இதனாலே பொருந்தல்; இதனாலே சகல ஆசையும் வந்தன்." (147/34)

4. "எல்லாம் சிவன் செயல்தான்." (145/26)

கருத்துரை : எனது எண்ணங்களாலும், புலன்கள் மற்றும் உடலுறுப்புக்களாலும் நான் செயல் புரிந்து கொண்டே இருக்கிறேன். மற்றவர் செல்வத்தைப் பெறுவதும், அட்டமா சித்திகள், சோதிடம்,

வைத்தியம் என்பனவுமே எனக்கு வாழ்க்கையாகி விட்டது. இச்செயல்களால் நான் நற்பலன் எதனையும் பெறவில்லை. அனைத்தும் சிவன் செயல் எனப் புரிந்து கொண்ட 'நான்' ஆமையைப்போல, உறுப்புக்களை அடக்கிவிட முடியாதா? எனது உடலை நான் என நான் கருதுவதாலேயே, புலனடக்கம் மற்றும் செயலடக்கம் இயலாததாகிறது.

II ஆசை, உறவு, பற்று மற்றும் பிறர் தொடர்பு :

1. "தூசே தரிக்கினும் ஒடியும் எனும்
சொல்லே புனையும் துடிஇடையார்;
ஆசைச் சுமையைச் சுமக்க எனக்கு
அந்தக் கரணச் சும்மாடு
மாசு இலாளே நீ தந்து
மாறாச் சுமையாச் சுமக்க வைத்தாய்
ஆசு ஆம் இந்தச் சுமை இறக்காய்
அம்மே கொப்பை உடையாளே" (35/65)

2. "தாரார்கள் ஓர்கணம், தருகடிகை தள்ளார்கள்
சந்ததமும் வந்த பிணியைச்
சலியாது வாங்கி அனுபவியார்கள் என்றன் உயிர்
தனுவிட்டு அகன்ற பொழுது
வாரார்கள் துணையாக நீராளமாய் உருகி
வந்திடுவர் போல அழுவர்
வந்தாலும் நடையற்ற பிணமோடு கூடியே
மயானவரை வந்ததாலோ
தாராளமாக நான் அவர்கள் உறவு என்பதும்
சதாகாலம் என்னை அவர்கள்
சார்வாக எண்ணினதும் இப்படி முடிந்ததால்
சரண்எனை அன்றி உளதோ? ..." (85/133)

(கடிகை = நாழிகை, சந்ததம் = நாளும், தனு = உடல், நீராளம் = கண்ணீர்பெருக்கி, சார்வாக = துணையாக)

3. "கல்லா மனிதர் சம்பந்தமே
கடந்தே உன்னை அடைவதென்றோ:... " (75/118)

4. "ஈசன் வடிவமே எட்டு உருவும் என்றுணர்ந்து
பாசம் தவிர்ந்து ஒழியப் பாராதது என்ன மதி" (103/4)

5. "மோகாதி காரியங்கள் முற்றும் இறந்து பதத்து
ஓகோகோ சேராது உழன்கின்றாய் நெஞ்சகமே." (112,13)

6. "பற்றாமல் பற்றும் பரமசுக நிட்டை பெற்றால்
பற்று உருவில் என்னது எனும் பார்வை உண்டோ-
நெஞ்சகமே." (128/75)

7. "சொல்லலாஞ்-சொல்லலாந்-தார-தனங்களைத்
தூற்றிவிட்- டோமென- வாயாலே. நன்னனா" (136/1)

உபதேசத்திரு வாக்கியங்கள்:

1. "பிறர்குற்றத்தைத் தனதாக எண்ணிக்கொண்டு, தன் குற்றத்தை விசாரிக்க வேண்டும்." (151/46)

2. "பாசபந்தம் வரும்போது, பாச நிவிர்த்தியும் தோன்ற வேண்டும்." (139/9)

3. "...யான் இங்கு எதை இச்சிப்பேன்? எதை இகழ்வேன் எனல் பற்றின்மை. இதில் யாருக்கும் நம்பிக்கை வரவேண்டுவதுான்." (147/33)

4. "ஒன்றிலே தோன்றி, அனைத்து உறவுமான உணர்வுக்கு, பகை, உறவு என்று உரைப்பது எங்கே?" (155/64)

கருத்துரை : பெண்ணாசை, உறவினர் பற்று, என்பதெல்லாம் வெறுஞ்சுமைகளே. பாச பந்தம் என்பதற்கும் விலக்கு உண்டு. பிறர் குற்றத்தைத் தன் குற்றமாகக் காணவேண்டும். உலகியலுக்கும் மேலான கல்வியும் உண்டு. அதனை அறியாதவர்களை விட்டு ஒதுங்குவது நல்லது. அனைத்தும் ஒன்று மட்டுமே எனும்

அறிவுடையவருக்கு, பற்று வைக்கவோ, உறவு கொள்ளவோ என, வேறு எது உள்ளது? ஆனால் இவற்றையெல்லாம் திரும்பத்திரும்ப, வாயளவில் சொல்லிக் கொண்டே இருப்பதை விட்டு, சிறிதளவேனும் நடைமுறைப்படுத்துதல் வேண்டும்.

**III உலகியல் அறிவு / துறை அறிவு (கலைகள்) :**

**திருவாக்கு:**

1. **"சித்திரத்திலே வரைந்த தீபம்போல் நில்லாமல்
கத்தித் தலைவெடிக்கக் கற்றனையே நெஞ்சகமே."**
**(118/37)**

2. **"வித்தைச் செறுக்கு அடைந்து வீணாள் கழிக்கும் மருள்
புத்திக் குருடர்நெறி போகாதோ நெஞ்சகமே."** **(125/65)**

3. **"ஈயக்கதிராம் இலக்கணமும் இன்குறளும்
ஆயப் பொருளா அறைந்தாலும் - நோய் அகலாது."**
**(102/164)**

4. **"சாதிக்கு இழுக்கு என்றும் தன்குலத்துக்கு ஈனமென்றும்
பேதிக்கும் மூடனே பேசக்கேள் - ஆதிக்கே
இல்லாத சாதிக்கு இருப்பிடம் ஈது என்று உரைத்தால்
நல்லோர் அதை நாடுவார்."** **(99/156)**

5. **".... நாடலுற்ற அறிவும், ஈனமுற்ற அறி
யாமையும் அறுவது எந்தநாள் ..."** **(81/128)**

**உபதேசத் திருவாக்கியங்கள் :**

1. "சகல கலை ஞான வல்லவர்களுக்கும், நிராசை வேண்டுவதுதான்."
**(145/25)**

2. "பிரபஞ்சத்திலே தோன்றும் பேதங்கள் எல்லாம்
சிற்றறிவிலேதான் என்று அறியவேண்டும்" **(147/31)**

3. "சுவரிடத்தில் உள்ள சித்திரம் வஸ்து ஆகாது. அதுபோல
தன்னிடத்தில் உண்டான சர்ப்பம் முதலியவை வஸ்து ஆகாது."
**(156/66)**

4. "எல்லாவற்றையும் தான் அறிவதாயும், தன்னை ஒன்றும் அறியாததாயும் - இப்படிக் காண்கின்றதே பித்யட்ச ஞானம்." (140/12)

5. "ஜீவ ஈஸ்வரஜகத்துக்களில் கட்டுப்பாடாய் - பேசா நின்ற வசனங்கள் எல்லாம், புத்திமான்களுக்கு நச்சு வசனங்களாய்த் தோன்றல் வேண்டும்." (160/81)

**கருத்துரை :** அறிவுடைமை என நம்மால் நாடப்படும் வித்தை, கலைகள், இலக்கணம், துறையறிவு போன்றனவெல்லாம், செறுக்கு (அகங்காரம்) தருவனவே. இவை, புத்திக் குருடு (அவித்தை / அஞ்ஞானம்) எனப்படுபவை. அஞ்ஞனமான இத்தகைய பல வற்றினுள், பலவாறான வேறுபாடுகளைக் காட்டிப் பேசுவது சிற்றறிவாகும். துறையறிவுடைய வல்லுநர்கள், வேறுபாடு காட்டுவதை நஞ்சுபோல ஒதுக்க வேண்டும். சித்திரத்தில் வரையப்பட்ட விளக்கு (தீபம்) அசையாதது போலச் செறுக்கற்று, நிராசையுடன் இருப்பதே உண்மையான பேரறிவு (ஞானம்) ஆகும்.

(வைராக்யம் பற்றிய ஆண்டவரது உபதேசங்கள், அடுத்த இதழிலும் தொடரும்)

*(தொடரும்...)*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

**(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)**

சித்தர்களின் வழிபாட்டுமுறை நம்மிலிருந்தும் வேறுபட்டது. சிலை வழிபாடு பல தெய்வ வழிபாடு என்று இன்றிச் சிவ வழிபாடு ஒன்றையே சிந்தையில் கொண்டவராய் இருந்தனர். வேறு தெய்வங்களை நோக்கிக் கையெடுப்பதில்லை.

"அண்டர்கோன் இருப்பிடம் அறிந்துணர்ந்த ஞானிகள்
பண்டறிந்த பான்மைதன்னை யாரறிய வல்லரே ?
விண்டவேதப் பொருளைஅன்றி வேறுகூற வகையிலாக்
கண்டகோவில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே"

என்பது சிவவாக்கியர் பாடல்.

வழிபாடு என்று நீங்கள் வரையறுப்பது எதனை ? ஆதி வழிபாடா? அனாதியாகத் தோன்றிய வழிபாடா? வேதங்களை ஓதினாலும் நீற்றைப் பூசிக் கொண்டு பலவாறு பிதற்றினாலும் அவர்கள் உள்ளத்திலே இறைவன் இருக்க மாட்டான். புறத்தே செய்யும் ஆரவாரமான வழிபாடுகளை அவன் ஏற்று நம்முள்ளத்தில் இருக்க மாட்டான். அருட்பெருஞ்சோதியாகிய இறைவனை நாம் இம்முறைகளால் அடைய இயலாது.

**"பூசைபூசை என்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்**
**பூசைஉள்ள தன்னிலே பூசைகொண்டது எவ்விடம் ?**
**ஆதிபூசை கொண்டதோ ? அனாதிபூசை கொண்டதோ?**
**ஏதுபூசை கொண்டதோ? இன்னதுஎன்று இயம்புமே."**

என்று கேட்டவர் சிவவாக்கியர்.

இன்றைக்கு உலகிலே நிகழும் வழிபாட்டு முறைகளைப் பற்றிச் சித்தர் ஒருவர் பாடிய தங்கப்பா என்ற தலைப்பில் அமைந்த பாடல்கள் அப்படியே தரப்படுகின்றன. ஆடு, கோழி, பன்றி முதலியவற்றைப் பலியிடுதலையும் தீ மிதிப்பதையும் தாரை தப்பட்டைகளை முழக்குதலையும் உடுக்கை அடிப்பதையும் ஏனைய பிற ஆரவாரங்களையும் வெறுத்துப் பாடிய சித்தர்களின் பாடல்களைக் கேட்டால் இன்றைய உலகம் அவரை நாத்திகர் என்று ஏளனம் பேசும். இந்தப் புரட்சியைத் தொடங்கி வைத்தவர் சிவவாக்கியரே. பின்னாளில் தோன்றிய தடங்கண் சித்தர் இன்னும் புரட்சிகரமான முறையில் பாடிய தங்கப்பா என்ற பகுதியில் கீழே காணலாம்.

**"அதிவெடி முழக்கி முரசுகள் முழக்கி**
**அறிடும் உடுக்கைகள் துடிப்ப**
**விதிர்விதிர் குரலால் வெற்றுரை அலப்பி**
**வீணிலோர் கல்லினைச் சுமந்தே.**
**குதிகுதி என்றே தெருவெலாம் குதிப்பர்**
**குனிந்துவீழ்ந்து உருகுவர் மாக்கள்**
**இதுகொலோ சமயம் ? இதுகொலோ சமயம்**
**எண்ணவும் வெள்கும் என்நெஞ்சே!"**

பொதுவாகப் பிற சித்தர்களிலிருந்து ஒரு வேறுபட்ட நிலையில் இன்றைக்கு உள்ள இறை உருவங்களையும் விமர்சிக்கின்றவராகக் காட்சி அளிக்கின்றார் தடங்கண் சித்தர். ஐந்தலை நாகங்கள் யானை வயிறு உடையது போன்ற உருவங்களை இருபது முப்பது மூடர்கள் ஒன்று கூடித் தெருவெல்லாம் இழுத்துச் செல்வது எல்லாம். தேவையற்ற வீண் ஆரவாரங்கள் என்று பாடுகிறார் தடங்கண் சித்தர். ஆனால் இன்றையச் சமுதாயத்தில் எங்கு பார்ப்பினும் இக்காட்சியே நிகழக் காண்கிறோம்.

"அருவருப்பு ஊட்டும் ஐந்தலை நாற்கை
ஆனைபோல் வயிறுமுன் துருத்தும்
உருவினை இறைவன் எனப்பெயர் கூறி
உருள்பெருந் தேரினில் அமர்த்தி
இருபது நூறு மூடர்கள் கூடி
இழுப்பதும் தரைவிழுந்து எழலும்
தெருவெலாம் நிகழும் அதுகொலோ சமயம் ?
தீங்குகண்டு உழலும்என் நெஞ்சே!"

இறைவனுக்கு நீராட்டு அல்லது அபிடேகம் என்ற பெயரில் செய்யும் செயல்களையும் சாடுகிறார் தடங்கண் சித்தர். கல் வடிவத்திற்குப் பல மாலைகளைச் சாத்துவர். வேள்வி என்ற பெயரால் கண்ணைக் கரிக்கும்படியான கரும்புகையைக் கிளப்புவர். இவையனைத்தும் பார்ப்பனர் செய்யும் வஞ்சனை: இதுவா சமயம்? என்ற வினாவையும் எழுப்புகின்றார். ஒரு சாரார் பிழைப்புக்காகச் செய்கின்ற வஞ்சனை சித்தர் மனத்தைச் சிந்தனையில் ஆழ்த்துகின்றது: அதனால்,

"எண்ணெயால் நீரால் பிசுபிசுக்கு ஏற்றி
இருண்டுபுன் நாற்றமே விளைக்கும்
திண்ணிய கற்குத் திகழ்நகை பூட்டித்
தெரியல்கள் பலப்பல சார்த்திக்
கண்ணினைக் கரிக்கும் கரும்புகை கிளப்பிக்
கருமணப் பார்ப்புசெய் விரகுக்கு
எண்ணிலா மக்கள் அடிமிதி படுவர்
இதுகொலோ சமயம் ? இதுகொலோ சமயம் ?"

ஆன்மிகப் பயணம் மேற்கொண்ட மக்கள் பெரிய தெய்வத் தலங்கள் பலவற்றிற்கும் சென்று மிதியுண்ட செய்தியைச் செய்தித் தாள்களில் பார்க்கிறோம். தலையை மொட்டையடிப்பது, காவடி கட்டி அவரை மலைமேல் ஏற்றுவது, தீ மிதிக்கச் செய்வது ஆகிய இவைகளா வழிபாட்டு முறைகள் ? இந்த மடமைத்தனம் கண்டு என் நெஞ்சம் வருந்துகிறது என்கின்றார் தடங்கண் சித்தர். பயங்கரமான காவடிகளைச் செய்து அவற்றின் முன்னர் நின்று குடிவெறி கொண்டவரைப் போலக் கூத்தாடித் தீ வளர்த்து அதில் இறங்கச் செய்வதும், ஆடு, கோழிகளை வெட்டி வீழ்த்தி, அவற்றின் குருதியைக் குடிப்பதும் வழிபாடு ஆகுமா ? காட்டில் வாழ்கின்ற நாகரிகம் இல்லாத காட்டு மிராண்டிகளைப் போல நடந்து கொள்வதுதான் சமய வழிபாடா? இவர்களின் அறியாமையைக் கண்டு இரங்குகிறேன்.

**"நீட்டிய பல்லும் சினமடி வாயும்**
**நிலைத்தவோர் கல்லுரு முன்னே**
**கூட்டமாய் மோதிக் குடிவெறித் தவர்போல்**
**குதிப்பர்தீ வளர்த்துஅதில் மிதிப்பார்**
**ஆட்டினைத் துடிக்க வெட்டி வீழ்த்திடுவார்**
**ஆங்கதன் உதிரமும் குடிப்பார்**
**காட்டில்வாழ் காலக் கூத்துகொல் சமயம்**
**கண்ணிலார்க்கு இரங்குமென் நெஞ்சே"**

உடுக்கையை ஒருவன் அடித்தவாறே முன் செல்வான்; ஒருவன் தீச்சட்டியைக் கையில் ஏந்திக் கொள்வான்; ஒருத்தி தலைமயிரை விரித்துப் போட்டுக் கொண்டு மடித்த வாயுடன் குரங்கினைப்போல் குதித்தாடிச் செல்வாள்; நாற்புறமும் வணங்கி நிற்கின்ற மக்கள் அவளிடம் குறி கேட்க நிற்பர். இவை எல்லாம் வாழ்வைக் காக்குமா ? இந்தக் கண்ணிலாக் குருடரைக் கண்டு என் நெஞ்சம் இரங்குகின்றது.

நாட்டில் எத்தனையோ குழந்தைகள் குடிக்கப் பாலின்றித் தவிக்கின்றன; பணி செய்வோர் அதற்கேற்ற பலன் கிடைக்காது தவிக்கின்றனர். நிலைமை இப்படி இருக்கையில், நாட்டிலுள்ள பலர் பால், தயிர், பழம், நெய், பருப்புணவு முதலியவற்றை இறைவனுக்கு முன்னர் வைத்துப் படைத்த பிறகு அவற்றைத் தாமே மிகுதியாக உண்டு மகிழ்வர். இதுவா உண்மையான சமயம் ? எது மெய்யுணர்வு?

என்பதை நாம் உணர முற்பட வேண்டும். நம்மைப் பீடித்துள்ள பந்தபாசங்கள் பற்றி ஆராய்ந்து அல்லாதனவற்றை விலக்கி நான் யார்? என்ற உண்மையை அறிய வேண்டும். பொய்யான புலனறிவைக் கடந்து பேருண்மையைப் புரிந்துகொள்ள முற்படுதலே இறையுணர்ச்சி ஆகும். வேண்டடத்தகாத செயல்களாலும், வழக்கங்களாலும், அச்சத்தாலும், அறியாமையாலும் இறைவனைத் தொழுகின்றவர் உய்வார்களோ ? இதுவா சமயம் ? இத்தகையோரைக் கண்டு என் நெஞ்சம் உழல்கின்றதே; இப்பொருளை உள்ளடக்கி அப்பர் பெருமான் பாடிய பாடல்

"காயமே கோயில் ஆகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனம்அணி இலிங்க மாக
நேயேநெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனர்க்குப் போற்றஇக் காட்டி னோமே"

தெய்வங்கள் அனைத்தும் ஒன்றே; வேறுபாடு காண்பது அறிவீனர் செயல். இறைவனுடைய தோற்றங்கள் பலவாறாக இருக்கலாம்; ஆயினும் இறைவன் என்கின்ற பொதுப்பெயரில் அனைத்தும் அடங்கும்.

"தில்லை நாயகன்அவன் திருவரங் கனும் அவன்
எல்லையான புவனமும் ஏகமுத்தி ஆனவன்
பல்லும் நாவும் உள்ளபேர் பகுத்துக்கூறி மகிழுவார்
வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே"

சிவனுடைய அஞ்செழுத்து மந்திரம் ஓதுவார்க்குப் புண்ணியம் தரும் தீர்த்தமாகப் புண்ணியப் பதியாக் விளங்குவது அஞ்செழுத்தே கங்கையில் போய் நீராடினால் பாவம் போய்ப் புண்ணியம் பெருகும் என்பவர்கள் வேறு தீர்த்தங்களில் நீராடுவது ஏன் ? இது அறியாமையே.

"தீர்த்தம் ஆட வேணுமென்று தேடுகின்ற தீனர்காள்
தீர்த்தம் ஆடல் எவ்விடம் தெளிந்துநீர் இயம்புவீர்
தீர்த்தமாக உம்முளே தெளிந்துநீர் இருந்தபின்
தீர்த்தமாக உள்ளதும் சிவாயஅஞ் செழுத்துமே"

அந்த அஞ்செழுத்து மந்திரம் நமசிவாய என்பதா ?

*(தொடரும்....)*

# நன்றி நவிலல்



பேராசிரியர்
இ. சுந்தரமூர்த்தி

சென்ற வாரம், பேராசிரியர் இ.சுந்தரமூர்த்தி அவர்களுடைய நூல் கொடை பற்றிய செய்தி வெளியிட்டிருந்தோம். அந்த 4000 நூல்களை நமக்குப் பெற்றுத் தருவதிலே மிக உதவியாக இருந்த பேராசிரியர் இரா. அரசு அவர்களுக்கும் நம் மடாலயத்தின் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். பேரா. சுந்த்ரமூர்த்திக்கும் அவர்தம் குடும்பத்தார்க்கும் மீண்டும் நன்றி.



பேராசிரியர்.
அ.ச.ஞானசம்பந்தன்

இலக்கிய ஞானி அ.ச. ஞானசம்பந்தன் அவர்கள் நூல் கொடை சென்ற இதழில் இடம் பெற்றிருந்தது. புகைப்படம் வெளியிடத் தவறிவிட்டது. இப்பொழுது அதனை வெளியிடுகிறோம். அவர்தம் குடும்பத்தார்க்கு மீண்டும் நன்றி.



காப்பியக் கவிஞர்
நா. மீனவன்

நம் மடாலயத்தின் முன்னாள் அலுவலர், காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர் நா.மீனவன் அவர்கள் ஆயிரத்திற்கும் மேற்பட்ட நூல்களை நம்முடைய நூலகத்திற்கு வழங்கி உதவி புரிந்துள்ளார்கள். மீனவன் அவர்களுக்கும், அவர்களுடைய துணைவியார் திருமதி. மெய்யம்மை ஆச்சி அவர்களுக்கும், குடும்பத்தார்க்கும் நம் மடாலயத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## கண்ணப்ப நாயனார் (தொடர்ச்சி)

## (நற்கதை நம்பி அய்க்கண்)

உயர்ந்த தாயன்பின் உருவமாக மாறிய திண்ணன் "வேட்டுவச் சாதியார் போல், விலங்குகள் திரியும் காட்டில், துணையில்லாமல் தனியாக இருக்கிறீரே?" என்று காளத்தி நாதரைப் பார்த்து உள்ளம் நைந்து கவலைப்பட்டான்.

"இங்கே பச்சிலையும் பூவும் வைத்துத் தண்ணீரும் ஊற்றிக் கேடு செய்தவர் யாரோ?" என்று கேட்டான் அவன்.

நாணன் "எனக்குத் தெரியும்.. முன்பு ஒரு நாள், உன் தந்தையோடு வேட்டையாட வந்தபோது, இங்கே வந்திருக்கிறேன். ஒரு பார்ப்பனன், தேவரைக்குளிப்பாட்டி, இலையையும் பூவையும் சூட்டி உணவு படைத்து, ஏதோ வாயில் சொல்லியபடி நின்றதைப் பார்த்தேன்.. அன்று செய்ததுபோல், இன்றும் அவன் செய்திருப்பான்" என்று தெரிவித்தான்.

இதைக் கேட்டதும், 'காளத்தி நாதர்க்கு இவையெல்லாம் விருப்பமானவை போலும்' என்று நினைத்துக்கொண்டான் திண்ணன்.

"தனியே இருக்கும் இவருக்கு இப்போது உண்ண இறைச்சியிடுவார் யாரும் இல்லையே? உணவு கொண்டு வர, நான் எப்படி இவரைத் தனியே விட்டுவிட்டுச் செல்வேன்? இறைச்சி கொண்டு வர வேண்டுமே?" என்று போவான்:உடனே திரும்புவான். தேவரைப் பிரியமாட்டாமல் கட்டியணைத்துக் கொள்வான். மீண்டும் போவான், பார்த்தபடி நிற்பான்; கன்றை விட்டுப் பிரியும் இளம் தாய்ப்பசு போலத் தவிப்பான்.

"நாதரே! நல்ல மெல்லிய இறைச்சியை நானே திருத்திக்கொணர்வேன். ஆனால் நீங்கள் தனியே இருக்கும்படியாக விட்டுச் செல்ல இயலவில்லை. ஆனால் நீங்கள் பசித்திருக்க, நான் இங்கே நிற்கவும் மனம் வரவில்லை" என்று தவித்துக் கண்ணில் நீர் பொழிய, இறுதியில் போவதற்குத் துணிந்து இறங்கினான்.

நாணனோடு, ஆற்றங்கரையிலுள்ள சோலைக்குத் திரும்பினான் திண்ணன். அங்கே காடன், "தீக்கடைந்து, பன்றியை நீங்கள் விரும்பும்

வண்ணம் அறுத்துச் சமைத்துள்ளேன். நீங்கள், இவ்வளவு நேரம் தாழ்த்தது ஏன்?" என்று கேட்டான்.

நாணன், அங்கே, "திண்ணன் குடுமித் தேவரைக் கட்டியணைத்துக்கொண்டு மரப்பொந்தினைப் பிடித்துக் கொண்டு விடாத உடும்பு போல, தேவரை விட்டு நீங்கவில்லை" என்று காடனிடம் தெரிவித்தான்.

காளத்தி நாதனைக் கண்டு, விடாமல் பற்றிக்கொண்டு நின்றதை, வேடருக்குத் தெரிந்த விலங்காகிய உடும்பின் குணத்தை இயல்பான உவமையாக்கியிருக்கும் கவித்திறன் போற்றற்குரியது அன்றோ?

மேலும், நாணன் "திண்ணன் இப்போது இங்கே வந்ததும், தேவர்க்கு உண்ண இறைச்சி எடுத்துப்போகத்தான்.. நம் குலத்தின் தலைவன் என்பதையே மறந்துவிட்டான். தேவர்க்கே அடிமையாகிவிட்டான்" என்று நண்பனிடம் சொன்னான்.

'தன்னை மறந்தாள் : தன் நாமம் கெட்டாள்: தலைப்பட்டாள் தலைவன் தாளே' என்ற அப்பர் சுவாமிகளின் பாடல் நினைவுக்கு வருகிறது...

திடுக்கிட்ட காடன் "என்ன செய்தாய் திண்ணா! நீ ஏன் இந்த மயக்கம் கொண்டாய்? எங்களுக்கு நீ தலைவன் என்பதை மறந்துவிட்டாயா?" என்று பதவியை நினைவூட்டினான்.

ஆனால், திண்ணன் அவனது முகத்தையே பார்க்காமல் பன்றியிறைச்சியின் சுவையான பகுதிகளை அம்பினில் கோத்து, தீயில் பதமாக வேக வைத்து, தன் வாயில் வைத்து மென்று சுவைத்துப் பார்த்து, இனிய துண்டுகளை ஒரு தேக்கு இலைத் தொன்னையில் சேர்த்துக் கொண்டிருந்தான்.

இதைக்கண்ட நாணனும் காடனும் "இவன் மிகவும் மயக்கநிலை கொண்டிருக்கிறான். இறைச்சித் துண்டுகளை வாயில் வைத்து மென்று தின்னாமல் இலையில் சேர்க்கிறான். தனது பெரும் பசியையும் நினைக்கவில்லை : நம்மையும் உண்ண அனுமதிக்க வில்லை. தெய்வ மயக்கம் கொண்ட இவனை, நாம் திருத்த முடியாது.

தேவராட்டியையும் நாகனையும் அழைத்துவர வேண்டும். எனவே நாம் ஊர் திரும்புவோம்" என்று முடிவு செய்து புறப்பட்டார்கள்.

நண்பர்கள் போவதையே அறியாமல், திண்ணன் தொன்னையில் நிறைய இறைச்சியை எடுத்துக்கொண்டு, திருமஞ்சனமாட்டுவதற்காக ஆற்றுநீரை தன் வாயில் நிறைத்துக்கொண்டு, காட்டு மலர்களைக் கொய்து, தன் தலைமேல் வைத்தவாறு காளத்தி நாதரை நோக்கி நடந்தான். ஒருகையில் வில்லும், மறு கையில் இறைச்சியுமாக, 'பிரானார்க்கு நல்ல பசி ஏற்பட்டிருக்கும்' என்ற கவலையுடன் வேகமாக நடந்தான் திண்ணன்.

காளத்தி நாதரின் தலையில், முன்பு வைக்கப்பட்டிருந்த பழைய மலர்களைத் தன் கால் செருப்பால் கீழே தள்ளிவிட்டு, வாயிலிருந்த ஆற்றுநீரை நாதரின்மேல் உமிழ்ந்து திருமஞ்சனம் செய்வித்தான்.

இக்காட்சியை 'உள்ளே விளைந்த அன்பை உமிழ்வார்போல், வாய்நீரைத் தேவர் முடியில் விட்டார்' என்று சேக்கிழார் உருக்கமாகப் பாடுகிறார்.

தன் தலைமேல் வைத்திருந்த புதிய மலர்களைக் குனிந்து தேவர் உச்சியில் சாத்தி, தொன்னையிலிருந்த ஊனைத் திருமுன்னர் படைத்து, "கொழுவிய தசைகளை எடுத்துப் பதமாக வேகவைத்துப் பல்லினால் அதுக்கி, நாவின் பழகிய சுவையால் தெரிந்தெடுத்துப் படைத்த ஊனை, அமுது செய்தருள்க" என்று அன்பால் விளைந்த இன்சொல் பலவற்றைச் சொல்லி நின்றான்.

கதிரவன் மறைந்து இரவு வந்ததும், 'இனி விலங்குகள் இங்கு வருமே என்று நினைந்து அஞ்சி, தேவர்க்குக் காவலாக, வில்லை ஊன்றிய கையொடும், கருத்த மலை போல ஐயர் பக்கத்திலே நின்றான்' என்பார் சேக்கிழார்.

மறுநாள் பொழுது விடிந்ததும், கண் துயிலாத வீரர், எம்பிரானுக்கு உணவு படைக்க, தனிவேட்டைக்குச் செல்கிறான். 'மெய்காட்டும் அன்புடைய வில்லியார் தனிவேட்டைக்கு, விலங்குகளைக் காட்டுவதற்காக, தன் கதிர்களை வீசி, இருள் திரையை எடுத்து, எழுகின்றான் கதிரவன்' என்று கவியழகு மிளிரப்பாடுகிறார் சேக்கிழார்.

காலைப் பொழுது மலர்ந்ததும், வழக்கம்போல் தவமுனிவர் சிவகோசரியார் ஆகம விதிப்படி பூசனை செய்ய, மலரும் நீரும் படையலும் கொண்டு மலையேறி வந்தார். காளத்திநாதர் முன் வந்த அவர், திருமுன்பு வெந்த இறைச்சியும் எலும்பும் கண்டு திடுக்கிட்டார். "இந்த அபச்சாரம் செய்தவர் யார்? வேடுவர்தான் செய்திருப்பார். இப்படிச் செய்ய விடலாமா? இவ்வாறு நடக்க நீர் எப்படிப் பொறுத்திருந்தீர்?" என்று பதறி அழுது விழுந்து துடித்தார் அவர்.

'எம்பிரானுக்குப் பூசனை செய்யக் காலம் தாழ்த்துவிட்டதே' என்று புலம்பிய சிவகோசரியார், இறைச்சி, எலும்புடன் இலையும், செருப்படியும் நாயடியும் திருவலகால் மாற்றிய பின் விருப்பினொடும் திருமுகலிப் புனல்மூழ்கி விரைந்தணைந்தார். தேவரது திருமுன்னர் கிடந்த அழுக்குகளையெல்லாம் திருவலகால் தள்ளிவிட்டு, தீட்டுப்பட்டுவிட்ட தன் உடலை மறுபடியும் தூய்மை செய்து கொள்ள, பொன்முகலி ஆற்றில் மூழ்கிக் குளித்துவிட்டுத் திரும்பி வந்தார்.

மேற்கூறப்பட்ட நிகழ்ச்சியில், இறைச்சியும் இலையும் செருப்படியும் சரி : அவையெல்லாம் திண்ணன் கொண்டு வந்தவை : ஆனால் எலும்பும் நாயடியும் எப்படி அங்கே வந்தன?

– இந்தக் கேள்விக்கு சேக்கிழார் விடையே சொல்லவில்லை ஏன்?

'நன்னூல்' இலக்கண நூலில், ஒரு காப்பியத்தில் இருக்கக்கூடாதவை என்று 10 குற்றங்கள் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று, 'மற்றொன்று விரித்தல்' : அதாவது 'பாட எடுத்துக் கொண்ட பொருளை விடுத்து, வேறொரு பொருளை விரித்தல் குற்றம்' என்பர்.

அக்குற்றத்தைத் தவிர்ப்பதற்காகவே, 'எலும்பும் நாயடியும்' பற்றிய செய்தியை விரிக்கவில்லை சேக்கிழார்.

சிவனிடத்து அன்பு பூண்டு வழிபட்ட தன் தலைவனைப்போல, அவனைப்பிரியாமல் கூடவே இருந்த வேட்டை நாயும் செய்த வழிபாட்டைச் சேக்கிழார் பாடவில்லை. நம் யூகத்திற்கே விட்டுவிடுகிறார்.

தன்னோடிருந்த வேடுவர்கள் நாணனும் காடனும் பிரிந்துசென்றதைக் கவனிக்காத திண்ணன், தன்னோடேயே திரியும் நாயையும் கவனிக்கவில்லை.

திண்ணன், தன் நாவுக்குச் சுவையான இறைச்சியை மட்டும், தேவருக்குப் படைத்தது போல், அவனுடைய நாயும், தனக்குப் பிடித்தமான எலும்பை எடுத்து வந்து படைத்தது என்பதைக் குறிப்பாக உணரவைக்கிறார் சேக்கிழார்.

தன் தலைவனுடைய மனப்போக்கின்படியே செயல்படுகின்ற அந்த நாயின் அன்பின் திறம் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

சிறுத்தொண்ட நாயனார் வரலாற்றில், பிள்ளைக்கறி உண்பதற்கு அமர்ந்த கபால பைரவ அடியார், 'தலைக்கறியும் வேண்டும்' என்று கேட்ட போது, சிறுத்தொண்டரும் திருவெண்காட்டு நங்கையும் திகைத்துப்போய் நற்கிறார்கள். ஆனால், 'இவர் இப்படிக் கேட்பார்' என்று முன்னரே எதிர்பார்த்துச் சமைத்து வைத்திருந்த தலைக்கறியைக் கொண்டு வந்த ஏவாப்பணிப்பெண் சந்தனத் தாதியின் நினைவு வருகின்றது.

இல்லத் தலைவர்கள் போல, அடியவர்க்கு அமுது படைக்கும் தொண்டில் தலைநின்ற அந்தப் பெண், ஆறறிவு உடையவள், ஆனால் திண்ணனின் வழி நின்ற நாய்க்கு ஓர் அறிவு குறைவு தானே?

ஆற்றில் மூழ்கித் தன்னைத் தூய்மைப்படுத்திக்கொண்டு திரும்பி வந்த சிவகோசரியார், காளத்தி நாதருக்கு ஆகம முறைப்படியான பூசனையை மேற்கொண்டார். திருமஞ்சனம் தொடங்கி, மலரிட்டுப் படைத்து, மறைமொழிகளாலே அர்ச்சனை செய்து வழிபாட்டை முடித்துக்கொண்டு, தபோவனத்திற்குத் திரும்பினார்.

இனி திண்ணனின் செயல்களைக் கூறத் தொடங்குகிறார் சேக்கிழார். இப்போதும் கவிக்கூற்றாக வரும் பாடல்களுக்கு முன்னரே, 'தீவினையின் திறம் ஒழிவேனாகிய யான், திண்ணன் செயல்வண்ணத் திறம் மொழிவேன்' என்று, தன்னையே உளப்படுத்திக் கொள்ளும் ஈடுபாட்டைக் கண்டு வியக்கிறோம்.

'கைவண்ணச் சிலை வளைத்துக் கான்வேட்டை தனியாடிச்
செய்வண்ணத் திறம் மொழிவேன், தீவினையின் திறம் ஒழிவேன்'

திண்ணனின் அன்புச்செயல்களைப் பாடுவதற்குக் கிடைத்த வாய்ப்பினால், தமது தீவினைகளின் திறமே ஒழிந்துபோய் விட்டதைப் புலப்படுத்தி மகிழ்கிறார், 'தொண்டர் சீர் பரவுவார்'.

தனி வேட்டையாடச் சென்ற திண்ணன், சிவனுக்குப் படைப்பதற்குரிய ஊன் உள்ள விலங்குகளை விரட்டிக் கொல்கின்றான். ஆனால் இங்கே அவனது செயலைக் 'கொன்றருளி' என்று குறிப்பிடும் சேக்கிழாரின் சொல்லாட்சி போற்றற்குரியது. தனக்காகவும் குடிமக்களுக்காகவும் விலங்குகளை வேட்டையாடுவது கொலை செய்வது தான்; ஆனால் அதே செயலை, இறைவனுக்குப் படையலிடுவதற்காகச் செய்யும்போது, அது 'கொன்றருள'லாக உயர் நிலையடைந்து விடுகிறது.

தீக்கடைகோலால் நெருப்புண்டாக்கி, கொன்றருளிய விலங்குகளின் இறைச்சியை உடைவாளால் நறுக்கி, வெட்டி, வளைவாக அகழ்ந்தெடுத்து, கொழுப்பை அரிந்து, துண்டாக்கி, அம்பில் வைத்து வதக்கி, தேன் கலந்து ஊன் உணவாக்குவதை 5 பாடல்களில் விளக்கமாக, சைவ வேளாளர் சேக்கிழார் கூறும் பாங்கு குறிப்பிடற்குரியது.

முன்புபோல், ஒரு கையில் ஊன் நிரப்பிய தேக்கிலையும் தலையில் புதிய மலர்களும், வாயில் ஆற்று நீருமாக வந்து, சிவகோசரியாரின் பூசனைப் பொருட்களை அகற்றிவிட்டு, தன் அன்புப் பூசனையை நிகழ்த்தினான் திண்ணன். ஊனைப் படைத்து "இது முன்பு படைத்ததை விடச் சுவையானது : பன்றி, மான் முதலிய விலங்குகளின் சுவையான உறுப்புகளை எடுத்துச் சமைத்தது : நானும் சுவை பார்த்து விட்டேன். தேனும் கலந்திருக்கிறேன். இது மேலும் சுவையாக இருக்கும்" என்று சொல்லி நின்றான்.

இவ்வாறு, இரவு முழுதும் காவல் நின்று கண்ணுறங்காமல் பகற்பொழுதில் வேட்டையாடிப் படைத்து வந்தான் திண்ணன்.

அதேபோல், சிவகோசரியாரும், நாள்தோறும் காலைப்பொழுதில் வந்து, அலங்கோலங்களைக் கண்டு வருந்தி, அவற்றைத் தூய்மை செய்து விட்டு, ஆகம முறைப்படி பூசனை வழிபாடு முடித்துவிட்டுச் சென்றார்.

இதற்கிடையில், நாணனும் காடனும் ஊருக்குச் சென்று நாகனிடம் செய்தியைத் தெரிவித்தார்கள். உடனே நாகன் தேவராட்டியை அழைத்துக் கொண்டு வந்து, மகனிடம் எவ்வளவோ பேசினார்கள். எனினும், திண்ணனைத் தம் பக்கம் அவர்களால் திருப்ப முடியவில்லை. அளவிலா வருத்தத்துடன் அவர்களும் திரும்பிச் சென்றார்கள்.

'முன்பு திருக்காளத்தி முதல்வனார் அருள்நோக்கால்
இன்புற வேதகத்து இரும்பு பொன்ஆனாற்போல், யாக்கைத்
தன்பரிசும் வினை இரண்டும் சாரும் மலம் மூன்றும் அற,
அன்பு பிழம்பாய்த் திரிவார் அவர்கருத்தின் அளவினரோ'

இவ்வாறு 5 நாட்கள் கழிந்தன.

நாள்தோறும் மலை ஏறிவந்து ஆகமபூசனை செய்து வந்த சிவகோசரியார் இளைத்துத் திகைத்து, "தேவரே இக்காரியம் செய்வாரைக் காண இயலவில்லை. நின் திருவருளால் இதை ஒழித்தருள வேண்டும்" என்று கனிந்து வேண்டிக் கொண்டார்.

அன்று இரவு, சிவகோசாரியாரின் கனவில் சிவபெருமான் எழுந்தருளிப் பேசினார்.

"அவனை முரட்டு வேடன் என்று நினையாதே! அவனுடைய செயல் பற்றி நான் உரைக்கக் கேள்!

அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாம்என்றும்
அவனுடைய நிலைஇவ்வாறு அறிநீ" என்றருள் செய்தார்.

*- (தொடரும்...)*

# இறைவணக்கமா? இறைவி வணக்கமா?

தமிழாகர் தெ. முருகசாமி (முன்னாள் முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி), புதுச்சேரி

நற்றமிழ் நாவலர், காப்பியக் கவிஞர் அண்ணன் நா. மீனவன் அவர்கள், கோவிலூர் ஆதீன ஆன்மீகத் திங்கள் இதழாம் திருநெல்லையில் திங்கள் தோறும் எழுதி வரும் கடவுள் வணக்கப்பாடல் ஓரிதழுக்கு ஓரிதழ் மெருகேறிக் கொண்டே வருகிறது. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதமாக இந்த மேத் திங்கள் இறை வணக்கப் பாடலைக் கருதலாம்.

மணிவண்ணத் திருமேனி எனத் தொடங்கும் இப்பாடல் முழுவதும் திருநெல்லைத்தாயைப் போற்றுவதாக உள்ளது. பாடல் தலைப்பு இறை வணக்கம் எனப் பொதுப்பட இருந்தாலும் பாடற் பொருள் சாக்த வழிபாட்டுக் கூறாகச் சத்தியை வியந்துரைப்பதாகவே உள்ளது. இதனால் இறை என்ற சொல்லின் பொதுப் பொருளிலிருந்து பிரிந்து இறைவி என்ற சிறப்புக் குரியதாய்ப் பொருளுணருமாறுள்ளது பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் கருதுகோளாகும்.

இறை என்ற சொல், பெயராயின் கடவுள் என்றும் வினைச் சொல்லாயின் தங்கு என்றும் பொருள்படும், ஈண்டுப் பெயர்ச் சொல் பொருளையே கொள்ளும் போது, கடவுள் அல்லது இறை-ஆணா? பெண்ணா? அல்லது இரண்டும் சேர்ந்ததா? என்ற ஐயத்துடன் கருத்தை ஆராய வேண்டியுள்ளது.

திருக்குறளின் முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்து. அதிகாரத்தின் குறள்களில் ஆதிபகவன், (1) வாலறிவன் (2) மலரடி ஏகினான் (3) என்றெல்லாம் ஆண்பாற்குரிய னகர ஒற்றுச் சொல்லுடன் கூறப்பட்டதால் கடவுள் என்பது ஆண்பாலினன் என எண்ணத் தோன்றுகிறது. இது போலவே, இறை எனப் பொதுவாகக் கூறும் ஓரிடத்திலும் கடவுள்-ஆண்பாலினன் என்பதாக நினைக்குமாறு அய்யன் திருவள்ளுவர்,

முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்(கு)
இறையென்று வைக்கப்படும். (388)

என்றார். மன்னன் என்றதற்கேற்ப இறை-ஆண்பால் எனலாம்.

ஆக, கடவுள் அல்லது இறை-ஆண்பாலினனாகக் கூறப்பட்டாலும் "ஒருபாற்கிளவி ஏனைபாற் கண்ணும் வருவதுதானே வழக்கென மொழிப" என்ற தொல்காப்பிய விதிப்படி ஆண்பாற் கடவுளைச்சுட்டினும் பெண்பாற் கடவுளுக்கும் பொருந்தும் எனலாம். இந்த நியதியின்படி அறியப்படும் ஓர் உண்மையாதெனில், கடவுள் வாழ்த்து என்று பொதுத் தலைப்பிட்டாலும் பாடலின் உள்ளே ஆண்பாற் சுட்டால் ஆண்பாற்கடவுளை நினைப்பிக்கு மாறுள்ளதைப் போலக் காப்பியக் கவிஞர் கூறும் இறை வணக்கப் பாடலின் உள்ளடக்கச் செய்தியாக உள்ளது பெண்பாற் கடவுள் பற்றியதாக உள்ளதால் இறை வணக்கம் என்ற பொதுத் தலைப்பை இறைவி வணக்கம் எனக் கருதலாம் என்பதில் யாதொரு குறையும் இல்லையன்றோ!

சைவசித்தாந்தத்தின்படி உமையவள் என்பவள் திருமாலின் தங்கை எனப்பட்டாலும் அவள் திருமாலின் அம்சமாகவே கருதுவது வழக்கமாகும். அந்த முறைப்படி மாமாயன் பின் பிறந்த மங்கை எனப்பட்டாள் திருநெல்லை. அவளைக் கவிஞர் "அபரஞ்சி" என்று அழைக்கிறார். புடம்போட்ட பொன் மயமானவள் என்பது கருத்து. சிலைத் திருமேனியில் தங்கக் கவசம் சார்த்தி வழிபடும் உலகியல் வழக்கப்படிக் கவிஞர்-தங்கத் தமிழால் "அபரஞ்சி" என்ற புதுச்சொல் கவசம் சார்த்தி அவளின் தகதகக்கும் பொன்மேனிப் பொலிவை அரிய சொல்லால் வார்த்து வடித்தார்.

அடுத்து மயிலின் ஒயிலான ஒய்யாரச் சாயலையுடையவள் என்றதோடு அடர்ந்த கூந்தல் அழகினள் என்பதை "மதர்த்த கூந்தல்" என்ற சொற்களால் வருணித்தார், மேலும் மான்போல் மருண்டபார்வையும் மைபூசப்பட்டதுமான கண்ணினள் என்றார். என்றாலும் திருநெல்லை அம்மனின் கண்ணுக்கோர் அணிகலனைப்பூட்டிப் பார்க்கும் புதுமையைச் செய்கிறார் கவிஞர். அதாவது மணி பணி பொன் அணியணிந்த மைசேர் கண்ணாள் என்ற தொடர் சிந்தனைக்குரியதாக உள்ளது.

இத்தொடரை அணியணிந்த கண்ணாள் என்றும் மைசேர் கண்ணாள் என்றும் பிரித்துப் பொருள் உணர வேண்டும். மைசேர்

என்பதற்கு அடைமொழியாக அணியணிந்த என்ற சொற்கள் பொருந்தா தென்பதால் தனித்தனியே உணர வேண்டியதாயிற்று.

கண்ணுக்கு அஞ்சனமாம் மைசேர்வது இயல்பாயினும் கண்ணுக்கு அணிகலன் அணிவது இயல்பில்லை என்பதால் கவிஞர் அங்ஙனம் கூறியது ஏன்? எனச் சிந்திக்க வேண்டியுள்ளது.

உடலின் எல்லா உறுப்புகளுக்கும் அணிகலன்கள் உண்டு. கண்ணுக்கு அணி அணிய முடியாது எனத் தெரிந்தும் கவிஞர் தெரியாமல் கூறினாரா? "மை சேர்" என்பதை அணியாகக் கருதுவதில்லை. ஆக எந்நிலையிலும் கண்ணுக்கு அணிகலன்பூட்டுவது இல்லாத போது கவிஞர் மறந்து கூறினாரா? அல்லது மரபு மீறலாகக் கூறினாரா? எனச் சிந்தித்துத் தெளிந்தால் கவிஞரின் நுண்மாண் நுழைபுல உருப்பெருக்கிக் கண்ணாடிவழி. திருநெல்லை அம்பாளின் திருவருள் பெருக்கு ஆறாக ஓடுவதைக் காணலாம்.

மணி-இரத்தின மணி, பணி-பாம்பு, பொன்-அழகிய, அணி-அணிகலன், இச்சொற்பொருள் உணர்வோடு இவற்றைக் கூட்டி மொழிந்தால் இரத்தின மணியை உடைய பாம்பின் அழகார்ந்த தீட்சண்ய பார்வையாம் அணிகலனை அணிந்த கண்ணாள் என்று உணரலாம். மீனின் பார்வையால் அதன் முட்டை குஞ்சாகி உயிர்ப்பெய்தல் போல் பாம்பு வகையுள் பார்வையாலே விடத்தைக்கக்கும் திட்டி விடப்பாம்பைப் போல் அதன் மறுதலையாக நோக்கும் அருளார்ந்த நோக்கால் பக்த கோடிகளின் பாவங்களைப் பொடிபடச் செய்யும் அருட்கண்ணோட்டத்தை அணிகலனாகக் கொண்ட "அன்னையே திருநெல்லை" என அடையாளப்படுத்துகிறார் கவிஞர். அதனால் தான் அவரின் சொல்லேர் உழவுத்திறத்தால் அவர் நற்றமிழ் நாவலர் எனத் திருவாவடுதுறை ஆதினத்தால் பாராட்டப் பெற்றார். "கண்ணிற்கணிகலம் கண்ணோட்டம்" (575) என்ற குறள் வழி திருநெல்லைக்கு அணிகலனைச் சார்த்தி மகிழ்ந்தது பொருத்தமன்றோ!

இன்றைய மருத்துவத் துறையில் கண்டறியப் பட்ட முன்னேற்றத்தில் அறுவை மருத்துவத்தை எளிதாகச் செய்வதன் குறிப்பாகக் கண்ணின் புரையை இலேசர் என்ற வகையில் கரைத்து

விடுவது போலப் பார்க்கும் பார்வையில் குருபார்வை கோடி நன்மை தரும் கருத்தைப்பொருத்தமுற உணரலாம். அவ்வாறே அம்பிகையின் கண்களுக்குக் கண்ணோட்டமாகிய அருள் அணிகலனாக அணிவிக்கப்பட்டது என்பது கருத்து. குருவின் ஸ்தானத்தில் அம்பிகை வீற்றிருந்து அருள்பாலிக்கும் சிறப்பால் அவளது கண், கண்ணோட்டம் உடையதால் கவிஞர் "மணி பணி பொன் அணி" அணிந்த கண்ணாள் என்றார்.

அம்பிகைக்கு மனோன்மணி என்ற சிறப்புப் பெயர் உண்டு. மனன் உள் மணி என்ற கருத்து. பக்தர்களுக்கு அருளும் கண்ணோட்டத்தை உள்ளத்திற்குள்ளே அடக்கி (பாம்புபோல்) வெளிப்படுத்தாமல் தக்க காலத்தில் அருள்பவள் என்றபடிக் கவிஞர் ஈண்டு "மணி பணி பொன் அணி" என்றார் போலும்! இந்தப் பாம்புத் தொடர்பாகவே கவிஞர் "அணி அரவம் விளையாடும் அம்பலவன் நம் பெருமான் அருகிருந்து சிவனழகை அனுபவிக்கும் திருநெல்லை" என்கிறார். பாம்பறியும் பாம்பின்கால் என்றபடி அருட் கண்ணால் பாம்புபோல் அருட்பார்வை செய்பவளுக்குப் பொருத்தமாகக் கணவனாம் ஈசன்மீது உலவும் பாம்பைப் பார்த்து நடுங்காமல் அப்பாம்பணிந்த கணவனை அருகிருந்து பார்த்து அனுபவிக்கின்றாளாம்.

இக்கருத்து ஒரு புதுமையானது. அவளழகை அவன்பார்த்து மகிழ்வதுதான் உலகியலும் இலக்கிய இலக்கண இயல்களும் உணர்த்தும் உண்மையாகும். யான்நோக்குங் காலை நிலன் நோக்கும் என்ற குறள் (1094) உலகியலும் இலக்கிய இயலும் சார்ந்த உண்மையை அகப்பொருள் இலக்கணத்தோடு உணர்த்துவதாகும்.

"ஒருவன் திருவுள்ளத்தில் அழகு ஒழுகப்பார்த்திருக்கும் உயிர் ஓவியமே" எனக் குமரகுருபரர் ஆன்மீக இயலின்படி மதுரைச் சொக்கன், மீனாட்சியை யாருக்கும் தெரியாமல் மனத்திற்குள்ளேயே எழுதி எழுதிப்பார்த்து மகிழ்கின்றான் (ரசிக்கின்றான்) என்பது மரபு. அதாவது ஆண்தான் பெண்ணழகைப் பார்த்து மகிழ்வது வழக்கமாயினும் ஈண்டுக் கவிஞர் மீனவன், சிவனழகை அருகிருந்து அனுபவித்தே அருள் செய்யும் திருநெல்லை என்றது பொருளாழம் மிக்க தொடராக உள்ளது.

கண்ணால் தீண்டி வருத்தும் திட்டிவிடப் பாம்பின் பார்வைபோல் அல்லாமல் ஈண்டி வரும் பக்த கோடிகளுக்கு இன்னருட்பார்வை செய்யும் வழக்கம் திருநெல்லைக்கு எதனால் வந்தது எனில் சிவனழகை அனுபவித்துக்கொண்டேயிருப்பதால் அவனது அருளை வாங்கி அன்பர்களுக்கு வழங்குகிறாள் என்பது கருத்து. சூரியனது ஒளியையே சந்திரன் வாங்கித் தருதல் போலக் கொற்றவாளீசரின் அருள் அழகை அனுபவித்த வண்ணமாகவே திருநெல்லை அன்பர்களுக்குத் தினமும் அருள்கின்றாள் என்பதே உண்மையாம் என்க! அதனால்தான் கவிஞர் சிவனழகை அனுபவித்து எனக் கூறாமல் அனுபவித்தே எனத் தேற்றே காரமிட்டு அனுபவித்துக் கொண்டே என்ற உண்மையை வார்த்தையால் வெளிப்படுத்தினார்.

இத்தகு திருநெல்லை - அழகிய கரங்களையும் தாமரை முகத்தையும் உடையவளாய், செம்பவள மலையில் படரும் பச்சைப் பசுங்கொடியாய் வன்னிவனம் என்னும் கோவிலூரைப் பேணும் தாயாய் உள்ளாள் என்கிற கவிஞர் - அத்தகு தாயைப் பேணி வழிபடுவோர் புண்ணியவான்கள் என்பதால், அப்புண்ணியரைப் போற்றல் என்பது கொற்றவாளீசர் உடனுறை திருநெல்லையை வணங்கற்குச் சமமாம் என்கிறார். கவிஞர் இங்ஙனம் கூறுவது, சேக்கிழாரை அடியொட்டியதாம் எனலாம். “பொங்கொளி வெண் திருநீறு பரப்பினாரைப் போற்றுவார் கழல்எம்மால் போற்றலாமே” எனச் சேக்கிழார் பெரிய புராணத்தில் திருநீற்றைப் போற்றிய மங்கையர்க்கரசியாரைப் பேணுவோரின் திருவடியைப் போற்றத் துணியும் துணிவைக் கவிஞர் மரபுபிறழாமல் கூறித் திருநெல்லையை வணங்குவது சிறப்பாக உள்ளது.

மேலும் அங்கயற்கண் உடனாய ஆலவாய் அண்ணல் எனக் கூறல்போல் திருநெல்லை உடனாய கொற்றவாளீசர் என்பதே மரபாயினும் ஈண்டுக் கவிஞர் மீனவர் கொற்றவாளீசர் உடனாய திருநெல்லை எனச்சொல்லாமல் சொல்லிப் போற்றும் புதுமையால் தான் இந்த “இறைவணக்கம்” என்ற தலைப்பு பொதுமை நீங்கிய சிறப்பால் “இறைவி வணக்கம்” எனக் கூறுவதில் குறையேதும் வாராதநிறைவேயாம் என்க!

## மாணிக்கவாசகரின் பக்திவலை

டி.ஆர். குருமூர்த்தி

மாணிக்கவாசகர் தமது, திருவாசகத்தில் பக்தி வலையில் படுவோன் காண்க என்று குறிப்பிட்டு அடியார்கள் இறைவன் மீது கொண்டிருக்கும் பக்தியின் மேன்மையினையும், இறைவனின் கருணையினையும் தெளிவாக விளக்கியுள்ளார். சித்தமும் செல்லாச் சேட்சியனாய் இருக்கும் இறைவன், பக்தர்களின் பக்திவலையில் அகப்பட்டுக்கொள்வான் என்பது மாணிக்கவாசகரின் நம்பிக்கையும், வாக்கும் ஆகும். பக்தி என்பது இறைவனின் கருணை மற்றும் அனுக்கிரகம் பெறுவதற்கான மார்க்கமாகக் கருதப்படுகிறது. பக்தி என்னும் வினையினை உள்ளத்தில் நினைத்து, உருவாக்கிச் செயலாற்றுவதை ஒவ்வொரு அடியார்களும் தெரிந்து அதற்கேற்பத் தம்மை உருவாக்கிக் கொள்வது அடிப்படைக் கடமையாகும். பக்தி வலையில் இறைவனைக் காணலாம் என்று சொல்லும் போது பக்தி வலையினை எவ்வாறு பின்னுவது என்பதனை அடியார்கள் முழுமையாகத் தெரிந்திருத்தல் நன்று.

இறை வழிபாடு பக்தி வலையின் மிக முக்கிய அம்சமாகச் சொல்லப்படுகின்றது. இறைவன் பற்றற்றவன். பற்றற்றிருந்து பற்றற்றவனை வழிபடல் வேண்டும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

எனத் திருவள்ளுவர் அறிவுறுத்துகிறார்.

இறைவனை எவ்வாறு வழிபடுவது என்பதற்கான இலக்கணத்தை அதாவது உடல்நிலை, மனநிலை இரண்டும் எவ்விதம் இருக்க வேண்டும் என்பதை மாணிக்கவாசகர் தமது திருச்சதகம் பாடலிலே எழுதியுள்ளார். அப்பாடல் கீழ்க்காணுமாறு தரப்பட்டுள்ளது.

மெய்தான் அரும்பி, விதிர்விதிர்த்து, உன்விரையார்கழற்கு என்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி, வெதும்பி, உள்ளம்
பொய்தான் தவிர்த்து, உன்னைப் போற்றி! சய சய போற்றி!
என்னும்
கைதான் நெகிழவிடேன், உடையாய்! என்னைக் கண்டுகொள்ளே

இறைவனது திருவடிகளை வணங்குவதற்குப் பூவின் அரும்பு போல நமது உடம்பு இருக்க வேண்டும். பூவின் அரும்பு பூவுக்குரிய அனைத்துத் தன்மைகளையும் கொண்டிருக்கும். அதுபோல மனிதர்களும் பூவின் அரும்பு போல இருந்து மனிதனுக்குரிய அனைத்துத் தன்மைகளையும் கொண்டிருக்க வேண்டும். பூ அரும்பு தனது நிலையிலிருந்து மேம்பட்டுப் பூவாக மலர்வது போல, மனிதனின் மனமும் அரும்பு நிலையிலிருந்து இறைவன் மேல் கொண்டுள்ள பக்தியினால் விரிவடைந்து, உடம்பும் மயிர்க் கூச்செரிந்து மனதிற்குத் துணை நிற்க வேண்டும். மனம் இறைவனை நாடும் போது கைகள் இரண்டும் தலைமேல் குவிய வேண்டும். மனம் இறைவனை நாடி உருகி நிற்கும் போது கண்களில் கண்ணீர் ததும்பி உடல் வெதும்பி இருக்க வேண்டும். மனத்திலே பொய்கள் அனைத்தும், தவிர்க்க வேண்டிய பற்றுகள் அனைத்தும் நீங்கி இருக்க வேண்டும். இந்நிலையில் இறைவனுக்கு வணக்கம் செய்து போற்றி போற்றி என வணங்கி, இவ்விதம் வணங்கும் ஒழுக்கத்தினை, பழக்கத்தினைக் கைவிட மாட்டேன் இறைவனே, என்னைக் கண்டுகொண்டு அருள் செய்க என்பது இறைவனை வழிபடுதல் என்பதன் இலக்கணமாகும் என மாணிக்கவாசகர் அருளியுள்ளார். மாணிக்கவாசகரின் அருள்வரிகள் இறைவன் மீது பக்திவலை பின்னுவதற்குப் பெரிதும் உதவியாக அமைந்திருக்கின்றன.

இறைவனிடம் வேண்டுதல் என்பது பக்திவலை அமைத்துக்கொள்வதன் இரண்டாவது அம்சமாகும். யாருக்கு என்ன வழங்க வேண்டும் யாரிடம் என்ன இருக்க வேண்டும். எப்போது இருக்க வேண்டும்; என்பதை இறைவன் தீர்மானிக்கிறான் என நீதிநூல்கள் தெரிவிக்கின்றன. இறைவனின் கருணை வயப்பட்ட, இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட பக்தன் இறைவனிடம் இது வேண்டும் அது வேண்டும் எனக் கேட்டதில்லை. கேட்க எதுவும் இல்லை. இறைவழிபாட்டின் வெளிப்பாடு மனதில் இறையருள் தங்குவதாகும். நிலையற்ற பொருட்கள், செல்வம் மீதான பற்று மனிதனிடத்திருப்பின், அவன் நிலையற்றுப் போவான். நிலையான இறையருள் மீது பற்று மனிதனுக்கு இருப்பின் அவனது நிலை மேம்படும். இறைவழிபாட்டில்

'வேண்டுதல்' என்பது என்றும் நிலையான இறையருளே ஆகும். இதனை மாணிக்கவாசகர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகிறார்.

யான்ஏதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கு என்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்தும்இரேன்
தேனேயும் மலர்க்கொன்றைச் சிவனேஎம் பெருமான் எம்
மானே உன்னருள் பெறுநாள் என்றுஎன்றே வருந்துவனே.

பிறப்பதற்கும் அஞ்சவில்லை இறப்பதற்கும் பயப்படவில்லை. வானமே பெறும்நிலை வந்தாலும் ஏற்கமாட்டேன். சிவபெருமானின் அருள் பெறுவது எப்போது என்பது தான் எனது வருத்தம் என மாணிக்கவாசகர் பாடியுள்ளார்.

பக்தன் என்ன வேண்டுகிறான் என்பது இறைவனுக்குத் தெரியும். அன்பின் வயப்பட்ட பக்தன் தேவையை இறைவன் தனது கருணையால் அளித்து விடுவார். இறைவனிடம் நிலையற்ற பொருள் குறித்து வேண்டுதல் தேவையில்லை. நமக்குரிய பரிசை இறைவன் தீர்மானிப்பார். இதனை மாணிக்கவாசகர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகிறார்.

வேண்டத்தக்கது அறிவோய் நீ
வேண்டமுழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
வேண்டி நீயாது அருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
அதுவும் உன்தன் விருப்பன்றே.
கூறும்நாவே முதலாகக்
கூறும்கரணம் எல்லாம் நீ!
தேறும்வகை நீ! திகைப்பு நீ!
தீமை நன்மை முழுதும் நீ!
வேறுஓர் பரிசு இங்கு ஒன்று இல்லை.

இறைவா, நான் என்ன கேட்கப்போகிறேன் என்பது உனக்குத் தெரியும். கேட்பதை அனைத்தும் தருபவன் நீயே. நீ எனக்கு

அளிக்கின்ற அருள் நான் உன்னிடத்தே கேட்கும் பரிசு ஆகும் என மாணிக்கவாசகர் பாடியுள்ளார்.

இறைவனை வழிபாடு செய்கின்ற போதும் வேண்டுதல் விடுக்கின்ற போதும் மனிதனது 'வினையேன்' என்கின்ற நிலை மாறி அடியேன் என்கிற நிலைக்கு மாற வேண்டும். அன்புப் பிணைப்பால் இறையருள் பெறலாம். காற்றுக்கு ஏற்றவாறு மரக்கிளைகள் அசைவது போல, இறையருளுக்கு ஏற்றவாறு பக்தர்களின் நிலையும் இருக்கும். மாணிக்கவாசகரின் பக்திவலையில் எம்பிரான் இருந்து அருள் பாலித்த போது தன்நிலையில் நிகழ்ந்த மாற்றத்தைக் கீழ்க்காணும் பாடலில் உணர்த்துகின்றார்.

கயல்மாண்ட கண்ணிதன் பங்கன் எனைக் கலந்து ஆண்டலுமே
அயல்மாண்டு அருவினைச் சுற்றமும்மாண்டு அவனியின் மேல்
மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண்டு என்னுடைய
செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ.

மாணிக்கவாசகர் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டதும், தன் அருகில் இருக்கின்ற அனைத்திலுமிருந்து விலகுகின்றார். அருவினைகள் அவரை விட்டுப் போகின்றன. சுற்றத்தை விட்டு விலகுகிறார். இந்த உலகத்தின் மேலுள்ள விருப்பமும் நீங்குகின்றது. இதரப் படிப்பினையும் தேவையில்லை என்றாகிறது. தன்னுடைய முழுமையான செயல்களிலும் மாற்றம் ஏற்படுகின்றது. இறைவன் மீது பக்திவலை பின்னினால், உலகப் பிணிகள் நம்மைப் பின்னாது என்பது மாணிக்கவாசகரின் பாடலிலிருந்து புரிகின்றது. பக்திவலையின் சிறப்பும் தெரிகின்றது.

இறைவழிபாட்டிற்கு ஏற்ப நம்மை நாம் தயார்படுத்திக்கொண்டு, அதற்குப் பொருத்தமானவர்களாக இருக்க வேண்டும். அப்போது தான் இறைவன் மீது பக்திவலை பின்னுவது எளிதாகும். இந்தப் பொருத்தத்தை எவ்வாறு ஏற்படுத்திக் கொள்வது என்பதற்கும் மாணிக்கவாசகர் கீழ்க்காணும் பாடலில் பதில் தருகின்றார்.

பொருத்தம் இன்மையேன் பொய்ம்மை உண்மையேன்
போத என்றுஎனைப் புரிந்து நோக்கவும்

வருத்தம் இன்மையேன், வஞ்சம் உண்மையேன்
மாண்டிலேன் மலர்க் கமலபாதனே!
அரத்த மேனியாய்! அருள்செய் அன்பரும்
நீயும் அங்குஎழுந்தருளி இங்குஎனை
இருத்தினாய் முறையோ! என் எம்பிரான்
வம்பனேன் வினைக்கு இறுதிஇல்லையே.

சிவத்த மேனியனே! சிவபெருமானே! அருள்செய் அன்பர்களை உனதருகில் வைத்துக் கொண்டு என்னைத் தனியாக இங்கு வைத்திருக்கிறாயே இது முறையோ! வம்பனேன் ஆன எனது வினைக்கு இறுதி இல்லையா என வேண்டுகிறார். நான் பொருத்தமற்றவனாக இருக்கிறேனா எனவும் வினவுகின்றார். பக்திவலைக்கான பொருத்தம் என்ன என்பதை மறைமுகமாக இப்பாடலில் மாணிக்கவாசகர் விளக்குகின்றார். பொய்மையை உண்மை என நம்பக் கூடாது. நிலையற்ற பொருட்கள் மீது பற்றற்று இருக்க வேண்டும். என்நிலை அறிந்து அருள்தர அழைத்தும், அதைப் பெறாது இருக்கிறேன் அதற்கு வருத்தமும் காட்டாது இருக்கிறேன். வஞ்சத்தை உண்மையென நினைக்கிறேன். அனுபவம் போதவில்லை, இந்நிலைமாறி, பக்தி வலை பின்னி உன்னை அடைய உனது அருள்பெற என்னைப் பொருத்தமுடையவனாக ஆக்கு என மலர்க்கமல பாதனிடம் மாணிக்கவாசகர் வேண்டுகிறார்.

ஊன்ஆரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே சிவபெருமான் தானேவந்து எனதுள்ளம் புகுந்து அடியேற்கு அருள் செய்தான் என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். ஊன்ஆரும் உயிர்வாழ்க்கை பக்திவலைக்குப் பெரிதும் தடையாக இருப்பதாகும். கல்வி வாழ்வு, ஞான வாழ்வு, பக்தி வாழ்வு, இறையருள் வாழ்வு என நம்மை நாம் வடிவமைத்துக் கொண்டால் இறைவனுக்காகப் பக்திவலை பின்னுவது எளிதாகும்.

பொய்யான நெஞ்சும், அன்பு கொண்ட பொய்யன் தன்வினையை உணர்ந்து, இறைவன் திருவடியை எண்ணி உருகி அழுதால் இறைவனைப் பெறலாம் என மாணிக்கவாசகர் அருளியுள்ளார். இறைவா உன்னைநினைந்து உருகுகின்றேன்; அருள்வாய்

உனைவந்து உறுமாறே என மாணிக்கவாசகர் வேண்டுகின்றார். இறைவன் திருவடியை எண்ணி உள்ளம் உருகி அழுதால் பக்திவலை பின்னுதல் எளிதாகும். இக்கருத்துத் தொடர்பான பாடல் கீழே தரப்பட்டுள்ளது.

யானே பொய், என் நெஞ்சும்
பொய், என் அன்பும்பொய்,
ஆனால், வினையேன் அழுதால்
உன்னைப் பெறலாமே?
தேனே! அமுதே! கரும்பின்
தெளிவே! தித்திக்கும்
மானே! அருளாய் - அடியேன்
உனைவந்து உறுமாறே.

மனிதன் தனது உள்ளக்கருவில் பக்தியினை வளர்த்து இறைவன் வந்து உள்ளத்தில் குடிகொள்ளும் அளவிற்கு மேம்படுத்திக்கொள்ள வேண்டும். இவ்வாறில்லையெனில், இருகை யானையை ஒத்துஇருந்து என்உளக் கருவை யான்கண்டிலேன் என மாணிக்கவாசகர் கூறுகிறார். தனது உள்ளக்கருவை உணராத மனிதன் இருகை யானை எனப்படுவான் என்பது மாணிக்கவாசகர் கூற்றாகும்.

உழவாரப் பணியும் இறைவன் மீதான பக்திவலை பின்னப் பெரிதும் உதவும் எனத் திருநாவுக்கரசர் கீழ்க்காணும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

விளக்கினால் பெற்ற இன்பம் மெழுக்கினால் பதிற்றி ஆகும்
துளக்கினன் மலர் தொடுத்தால் தூயவிண் ஏறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில் கீதம் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே.

துடப்பம் கொண்டு கோவில்களில் குப்பையை அகற்றித் தூய்மை செய்வது உழவாரப்பணியில் ஒன்றாகும். இதனால் அடியார்களுக்கோர் இன்பம் கிட்டும். தண்ணீர் ஊற்றிக் கோவிலைக் கழுவி ஈரத் துணிகொண்டு சுத்தம் செய்தால், மேலே சொன்ன இன்பம் பத்து மடங்காகப் பெருகும். இறைவனுக்கு மலர் தொடுத்துக் கொடுக்கும் பணி

நம்மைச் சிவலோகம் கொண்டு போய்ச் சேர்க்கும். ஆலயங்களில் விளக்குகளை ஏற்றி ஒளியினைப் பெருக்கினால் நமக்கு மெய்ஞானம் கிட்டும். சிவத்தலங்களில் தேவாரப் பாடல்களை மனம் உருகப் பாடுவோர்க்கு இறைவனே அருள் செய்வான் எனத் திருநாவுக்கரசர் அறிவுறுத்துகின்றார். உழவாரப் பணி என்பது, ஆலயங்களைத் தூய்மை செய்தல், இறைவனுக்கு மலர் தொடுத்துத் கொடுத்தல், விளக்கேற்றிவைத்தல், பன்னிருதிருமுறைப் பாடல்களைப் பாடுதல் ஆகிய அனைத்தும் ஒருங்கிணைந்ததாகும். அடியார்கள் உழவாரப் பணி மூலம் பக்திவலை பின்னி இறைவனைப் பெறலாம்.

இறைவழிபாடு, வேண்டுதல் இவ்விரண்டிற்கான பொருத்தம், ஊன்ஆரும் உயிர்வாழ்க்கை விலக்குதல், இறைவன் திருவடியிணையே குறிக்கோளாக இருத்தல், உழவாரப் பணி ஆகியன இறைவனுக்குரிய பக்திவலையின் முக்கிய அம்சங்களாகும். இதனடிப்படையில் வாழ்வினை அமைத்துக்கொண்டு இறையருள் பெறுவோமாக.

திருச்சிற்றம்பலம்

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (சுவேதராசப் படலம்)

கண்டஅப் பொழுதுவேள் கணைக்(கு)இ லக்கனாய்
மண்டிவன் காமநோய் வளர்ந்து பொங்கலால்
தண்டகன் பின்வரல் சற்றும் ஓர்கிலான்
பண்தரு மொழியினை வலிந்து பற்றினான் 21

பற்றிடு போழ்தின்அம் முனிவன் பார்த்தனன்
செற்றம்மிக்(கு) எழுதரச் சினந்து வைதுஅழும்
குற்றம்இல் கன்னியை மீட்டுக் கொண்டனன்
இற்ற(து)இவ் வனம்இனி என்று போயினான் 22

முனிவரன் கொடுஞ்சினம் மூண்டு வைதலான்
நனிவரும் தணவரும் துயரம் நண்ணினான்
கனிவரும் தண்டகன் காமம் காழ்க்கொளின்
தனிவருந்(து) இடர்உறல் சாற்ற வேண்டுமே 23

ஆகையால் அவ்வனம் மற்றை நாள்முதல்
சாகை ஆதிகள்செறி தருக்கள் அற்றன
ஓகைகூர் பறைவமா ஒழிந்து போயின
ஈகைசா லாதவர் கீர்த்தி என்னவே 24

நிகர்அரு முல்லையாய் நிலாய அவ்வனம்
பகர்அரும் கொடியசெய் பாலைஆயது
புகர்அரும் இனியபால் பொழியும் ஓர்பசு
தகர்அரும் புலிஉருச் சமைந்த(து) என்னவே 25

ஆட்சியில் அமர்ந்துவெவ் அலகை எங்கணும்
மூட்சியில் குதிக்கும் முனிவ னத்திடைக்
காட்சிசெய் நடுநிலை கைக்கொண்(டு) உய்த்திடும்
மாட்சிஇல் லாதவர் மனைநி கர்ப்பவே 26

பொழிஅழல் வெம்சுரம் புகுந்(து)உ ளோர்வறுங்
குழிவறுங் கூவலைக் குறுகி நோக்குவார்
பழிபடு படிறர்நெஞ்(சு) என்ன வீரம்அங்(கு)
ஒழிதரல் கண்டுநெட்(டு) உயிர்ப்பு வீங்குவார் 27

தீயிடைப் படும்புனல் என்று செப்புதல்
வேய்இடைப் பட்டுவெங் கள்ளி வேதரும்
ஆயிடைக் கண்டனம் அடையின் மெய்வெயர்
தூயிடைக் கால்எனத் துவற்று நீர்மையால் 28

நடுநிலைத் திணைஎனநவில்வர் பாலையை
நடுநிலைப் பூதமா நாம்அங் கேஉறல்
நடுநிலை ஆம்என நாடி அல்குமால்
நடுநிலை பிழைத்திடா நாமச் செந்தழல் 29

பொற்(பு)அமை மைந்தர்பின் தொடர்ந்து பூவைமார்
அற்(பு)அமை கேண்மையில் சேறல் ஆய்தரின்
வற்(பு)அமை சுரத்தழல் வலிக்கும் தம்முடைக்
கற்(பு)அமை அழல்வெரு வாமைகண்டரோ 30

நீர்உலாம் பிறாண்(டு)உறா நிகழ்செந் நாய்க்குலம்
போர்உலாம் சுரத்தையே புகழ்ந்து மேவுவ
கார்உலாம் படிஎனக் கரியபேய் கடந்து
ஏர்உலாம் இடம்எனச் செறிதல் போலவே 31

எழுகடல் அடுத்(து)அடுத்(து) இயைந்(து)உறாவிடில்
பழு(து)உறு பாலையில் படுவெம் தீயினால்
முழு(து)உடல் கருகுமண் முற்றும் விண்ணமும்
ஒழுகுவான் கங்கைஅங்(கு) உறாது போம்எனில் 32

நுதல்கொடும் பாலையின் நுவலும் ஐந்தனுள்
முதல்இடை கடைஎன மூன்று மேயலால்
இதம்அருள் பூதம்மற்(று) இரண்டும் இன்மையால்
சிதல்எறும்(பு) ஆதியும் சரித்தல் தீர்ந்தவே 33

பற்பல உரைப்ப(து)என் பாயும் ஏற்றினான்
வில்பயில் நுதற்கணால் வெந்த தேஎனச்
சொற்பயில் புல்முதல் எவையும் தோன்றில
கல்பயில் கொடுஞ்சுரக் கடுமை எண்மையோ 34

காழியில் தோன்றிய கௌணியப் பிரான்
வாழிஇங்(கு) உறும்எனில் மற்(று)ஒன்(று) ஆம்படி
ஏழிசைத் தமிழ்மொழிந் திடுதல் வல்லனால்
ஊழியில் கனல்குடி உற்றதோ என்பார் 35

அறி(வு)இலாத் தண்டகன் அடைந்த காமத்தீச்
செறியும்இக் கா(டு)எலாம் செறிந்து சுட்டதால்
முறி(வு)இல்இத் தீயினை அவிக்க முற்றுவோர்
குறிகொளும் எவர்கொல்என்(று) உளைந்து கூறுவார் 36

மொழிந்தஇச் சுரத்தைமுன் முல்லை ஆக்கநாம்
பொழிந்ததண் கருணையால் போந்து நோக்கிநாம்
அழிந்ததற்(கு) இரங்கிநம் சமிவ னத்தமர்
கழிந்தபேர் அருட்பரன் கழல்கள் சிந்தியா 37

நின்றனம் அப்பொழு(து) அனைய நின்மலன்
பொன்றல்இல் கருணையால் புழுங்கு பாலையில்
துன்றின மரம்கொடி துணைக ளோ(டு)அளாய்
ஒன்றின இலங்குபுள் ஒருங்கு வந்(து)அரோ 38

முன்இருந் (து)அதனினும் முனி(வு)இ லாவளம்
பன்னரும் பதின்மடங்(கு) எனப்ப கர்ந்திட
வன்னியின் அடிஅமர் வள்ளல் தம்பிரான்
தன்அருள் சுரந்தனன் தழைந்து மல்கிற்றே 39




எங்கணும் பாதவம் எங்க ணும்கொடி
எங்கணும் தளிர்இலை எங்க ணும்மலர்
எங்கணும் பசியகாய் எங்க ணும்கனி
எங்கணும் முனிவர் எங்க ணும்புனல் 40

அற்பமும் சிறுமைஎய் தாத அவ்வனத்(து)
அற்புதம் நோக்கிஅங்(கு) அளவ ளாவிநாம்
அற்(பு)அகல் முனிவரோ(டு) அமர்ந்து வைகினோம்
அற்புதன் திருவருள் அகத்துக் கொண்டரோ 41

ஆய(து)ஓர் காலைவந்(து) அழத்தை உண்ணுதல்
மேயினன் சுவேதன்அவ் வியப்பு நோக்கியே
பாயமற்(று) அவன்எதிர் படர்ந்து நின்றுநீ
ஏயஇச் செயல்செயல் என்னை என்றனம் 42

அன்னவன் இரங்கிநம் அடிவி ழுந்(து)அழுது
இன்னல்அம் குழிசியாய் எழுந்து நேர்நின்று
மன்னவன் யான்முன்இவ் வனத்து நோற்றலான்
மின்அவிர் தெய்வத உருவம் மேவினேன் 43

மலரவன் உலகமும் சார்ந்து வைகுவேன்
அலர்பசி வயிற்(று)எழுந்(து) அறவ ருத்தலான்
அலர்தொழும் பிரமனை நயந்து போற்றிஇவ்
உலர்தல்இல் பசிஉறற்(கு) ஏதுஏ(து) என்றேன் 44

*(தொடரும்....)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**




# திருவண்ணாமலை கிரிவலத்தில் தமிழ்த்தாய் கோயில்

1984 இல் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்ற வேளையில் -ருவான தமிழ்ச்சுரங்கம் பேராசிரியர் முனைவர் ஆறு. அழகப்பன் வர்களைத் தலைவராகக் கொண்டு அருந்தமிழ்ப் பணிகளைச் செய்து ருகிறது. தமிழன் என்ற உணர்வுகளைப் பெற, சில குறியீடுகளை ருபணியாகக் கொண்டுள்ளது. அவ்வகையில் உலகத்தமிழர் உவப்ப, மிழ்த்தாய் உருவம் உருவாக்கிப் பரப்பும் பணியில் தொடர்ந்து ஈடுபட்டு ருகிறது. தமிழ் உணர்வு மங்காமல் இருக்க, தமிழ்த்தாய், ருவுருவத்தை, திருவண்ணாமலை கிரிவலத்தில் தமிழ்த்தாய் கோயில் -ருவாக்கி வீற்றிருக்கச் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளது. யற்சி திருவினையாக்கிட அருள்மிகு அண்ணாமலையார் அருள் லிப்பாராக.

**தமிழ்ச்சுரங்கம்**
சென்னை - 92